உ

முருகன் துணை

# மருதமலை
# முருகன் அந்தாதி

ஆசிரியர்

கி. வா. ஜகந்நாதன்

வெளியீடு :

மருதமலை — திரு அருணகிரிநாதர்
அருள்நெறிக் கிருத்திகைக் கழகம்

உ

முருகன் துணை

# மருதமலை
# முருகன் அந்தாதி

ஆசிரியர்

கி. வா. ஜகந்நாதன்

வெளியீடு :

மருதமலை — திரு அருணகிரிநாதர்
அருள்நெறிக் கிருத்திகைக் கழகம்

# முன்னுரை

முருகன் எழுந்தருளியுள்ள ஆறுபடை வீடுகளில் ஒன்று, குன்றுதோருடல் என்பது. 'குன்றுதோருடல் மேவு முருகன்' என்று சொல்லிப் போற்றினர் முந்தையோர். தலங்களை மட்டும் குறிக்கும்போது பல குன்றுகள் என்று சொல்வதே முறை. ஆனாலும் இப்போது குன்றுதோருடல் என்பதே பல குன்றுகளையும் குறிக்கும் தொடராக வழங்குகிறது.

குன்றுதோருடலென்று பாராட்டத்தகும் குன்றுகள் பலவற்றில் மருதமலை என்பதும் ஒன்று, இது கொங்கு நாட்டில் கோயம்புத்தூருக்கு வடமேற்கே ஏறத்தாழ ஏழரை மைல் தூரத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைச்சரிவில் உள்ளது. இங்கே எழுந்தருளியிருக்கும் முருகன் கண்ணைக் கவரும் வடிவும் கருதுவார் வேண்டுவனவற்றை அருளும் கருணையும் உடையவன்.

இந்தத் தலத்தைப்பற்றிய பெருமைகளைக் கச்சியப்ப முனிவர் தாம் இயற்றிய பேரூர்த்தல புராணத்தில் இரண்டு படலங்களில் கூறுகிறார். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்று வகைச் சிறப்பும் ஒருங்கே பொருந்தியுள்ள இத்தலத்திற்கு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் ஒன்று உண்டு. இவற்றையன்றி வேறு புலவர் பெருமக்கள் இத்தல சம்பந்தமாகப் பிரபந்தங்களையும் பாடல்களையும் இயற்றியிருக்கிறார்கள்.

முருகப் பெருமானுடைய திருக்கரத்திலுள்ள வேல் இங்கே மருத மரமாக விளங்கியதால் இதற்கு மருத மலை என்ற திருநாமம் உண்டாயிற்று. பாம்பாட்டி சித்தர் யோக சமாதியில் இருந்த இடம் இது என்று கூறுவர். கோவைமாநகர மக்கள் இங்கே திரள் திரளாக வந்து கிருத்திகை முதலிய விசேஷ நாட்களில் வழிபட்டுத் தம் வேண்டுகோள் நிறைவேறப்பெறுகிறார்கள்.

இங்கே ஒவ்வொரு மாதமும் வழிபாடுகளை நடத்தி உணவு வழங்கும் தொண்டைப் பல நிறுவனங்கள் நிகழ்த்தி வருகின்றன. 1956-ஆம் ஆண்டு முதல் நடைபெற்றுவரும் திரு அருணகிரிநாதர் அருள்நெறிக் கிருத்திகைக் கழகம் ஒவ்வொரு கிருத்திகையிலும் விழா நடத்திவருகிறது; ஆண்டு விழாவோடு படி விழாவையும் நடத்தி மக்களுக்கு அன்பையும் அற உணர்வையும் ஊட்டி வருகிறது.

இந்தக் கழகத்தினரின் விருப்பப்படி இந்த அந்தாதி முருகன் திருவருள் துணைகொண்டு பாடப்பெற்றது. 'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனு'கிய முருகன் இதனைப் படித்துத் துதிப்பவர்களுக்கு நலம் தந்தருளுவான் என்றே நம்புகிறேன்.

15–12–66

**கி. வா. ஜகந்நாதன்**



மருதமலை முருகன்

உ

முருகன் துணை

# மருதமலை முருகன் அந்தாதி

### காப்பு

குருதமர் தந்தை அனையென
நிற்கும் குமரன்அடல்
விருதமர் அற்புத வேலன்
எழிற்கொங்கின் மேவுமெழில்
மருத மலைக்குகன் பாதத்தில்
அந்தாதி வாய்ப்பச்செயும்
கருதம ரர்க்கருள் யானை
முகத்தன் கருணையதே.

### நூல்

பூங்கடம் பந்தார் புனைமார்பன்
வேலன் பொருதசுரர்
தோங்கடந் தான்என் உளங்குடி
கொண்ட சுடருருவன்
பாங்குறு வள்ளி மணவாளன்
என்று பணியநின்றான்
தீங்கடும் மாமரு தாசல
மென்னும் சிகரியிலே. (1)

---

**(காப்பு)** தமர்-சுற்றத்தார். அடல் விருது-வெற்றி அடையாளம். கொங்கில்-கொங்கு நாட்டில். கருணையது: அது, பகுதிப்பொருள் விகுதி. கருணை வாய்ப்பச் செயும்.

1. தோம் கடந்தான்-தீமையை வென்றான். தீங்கு அடும்-பாவத்தைப் போக்கும். சிகரி-மலை.

கரிமா வதனற்குத் தம்பி
உமைதரு காதலன் அவ்
வரிமா மருகன் புரமெரித்
தோனுக் கரியமைந்தன்
தெரிமா மறைக்கும் அரிய
இராசியச் சித்துருவன்
எரிமாயை நீக்க மருத
மலையில் இருந்தனனே. (2)

இருந்தும் கிடந்தும் வினைசெய்தும்
நின்றும் எனதுளத்திற்
பொருந்தும் படிவைத்தேன் மாமரு
தாசலம் போந்தகுகன்
திருந்தும் கமலத் திருவடி;
ஆதலின் சேருமின்னல்
வருந்தும் படிக்கெனை வாட்டா
தெனுந்திடம் மன்னினனே. (3)

மன்னுவ தென்றுமுன் றன்கரு
ணைச்செல்வம் வாய்த்ததுணை
மின்னும்நின் வேலும் மயிலும்
எனக்கெது வேண்டும்அது

---

2. காதலன்–பிள்ளை. அரி – திருமால். இராசியம்–இரகசியம்.

3. திருவடி வைத்தேன்; ஆதலின் திடம் மன்னினன்.

நின்னரு ளாலே கிடைக்கின்ற
தென்னினி நேர்குறைஎன்
இன்னுயி ராம்குக மாமரு
தாசலம் ஏய்ந்தவனே. (4)

தவம்செய்து நின்பதம் உள்ளத்தில்
தாங்கித் தருக்கொழிந்து
பவம்செயும் பொல்லா வினையொழித்
தேறும் படிஅறியேன்
நவம்செயும் நின்எழில் மேனியைக்
கண்டுன நாமஞ்சொலிச்
சிவம்செயும் நன்மரு தாசலம்
போற்றித் தெளிந்தனனே. (5)

தெளிவு வருமென்று நூல்பல
கற்றும் செவிநிறைய
அளிவரப் பற்பலர் பாலே
வினவியும் ஆறுமுகன்
ஒளிவரும் வேலன் அருளின்றி
உண்மை உணர்வதுண்டோ?
களிவர அன்னோன் மருத
மலைதாழ் கருத்தினனே. (6)

---

4. நேர்குறை-என்னை அடையும் குறைகள். ஏய்ந்தவனே-பொருந்தி நிற்பவனே.

5. பவம்-பிறப்பு. நவம்-புதுமை. சிவம்-மங்கலம்.

6. அளி வர-அன்பு உண்டாக. தாழ்-பணியும்.

கருத்தி லிருந்து கதிகாட்டி
ஏழை களிக்கும்வணம்
திருத்தி அடிவீழ்ந் திருக்குமா
ளாக்கித் திருவருளிற்
பொருத்தி வினைமயல் போக்குகின்
றுன்வெட்சிப் பூவழகன்
மருத்தருஞ் சோலை மருத
மலைதிகழ் வானவனே. (7)

வானவ னென்றும்நம் கண்கண்ட
தெய்வ வடிவனென்றும்
தேனவன் என்றும் திகழ்மறை
மேலுறு தேசனென்றும்
யான்அவன் றன்னை அறிவதன்
முன்னம் எனையடிமை
தானெனக் கொண்டனன் மாமரு
தாசலச் சண்முகனே. (8)

முகம்ஆறும் ஆதாரம் ஆறிலும்
நின்று முதிர்அருளிற்
புகயோகு செய்பவர் தம்துணை
யாகிப் பொலிந்திலகும்

---

7. கதி-அடையும் இடம். மரு தரும்-நறுமணத்தை வீசும்.
8. தேசன்-சோதி வடிவன்.

தகஆ றெனுஞ்சம யப்பொரு
ளாகித் தயைபுரியும்
புகழேறு கின்ற மருத
மலைவாழ் புனிதனுக்கே. (9)

புனிதம் பெறும்வணம் முன்னாள்
அரன்கட் பொறியெனவே
இனிதுறக் கொண்டு பகீரதி
ஏந்தும் இயல்பதனால்
நனியின்று மாப்புனி தக்கங்கை
ஆயினள் நானிலத்தில்
கனிதுன்று பூம்பொழில் மாமரு
தாசலக் கந்தனையே. (10)

தனைமறந் தோங்கும் தவத்தினர்
உள்ளத் தனிக்குகையில்
வினைமறந் தோங்கிய மோனத்தில்
ஒன்றி விளங்குகின்றான்
தினைமறந் தின்குரல் கேட்டுக்
கிளிகள் திளைக்கும்வள்ளி
யினைமற வாவேள் மருத
மலையில் எழிற்குகனே. (11)

---

9. முகம் ஆறும் இலகும், புரியும்.

10. பொறி–தீப்பொறி. பகீரதி–கங்கை. துன்று-செறிந்த. கந்தனை முன்னாள் உறக் கொண்டு. முருகனைத் தாங்கியமையால் கங்கை புனிதம் பெற்றனள்.

11, உள்ளத் தனிக் குகை–தகராகாசம். வினை-செயல்

எழிலினுக் கியாரும் இணையிலன்
மாயா இளமையினன்
வழிபடும் அன்பர்க் கெளியவன்
வானவர் வாழ்வுபெறக்
கொழிவளந் தேக்கிக் களிப்புறச்
சூர்க்குலம் கொன்றபிரான்
அழிவறு மாமரு தாசலக்
கோயில் அமர்ந்தனனே. (12)

தனம்பெற லாம்கல்வி எய்தலாம்
வீரந் தனைப்பெறலாம்
கனம்பெற லாம்புகழ் பெற்றுக்
களித்துக் கவின்பெறலாம்
அனம்பெற லாம்ஆடை பெற்றிட
லாம்நல்லோர் அன்புநலம்
தினம்பெற லாம்மரு தாசல
வேள்அருள் செய்திடினே. (13)

செய்ய திருவடிப் போதும்செவ்
வாடைத் திருவிடையும்
மொய்யுறு மார்பும்முந் நான்கு
கரங்களும் மூளையிலும்

---

12. சூர்க்குலம்-சூரனுடைய குலத்தை.

13. கனம்-மதிப்பு. கவின்-அழகு.

ஐயன் முருகன் மருத
மலைக்குகன் ஆரருளைப்
பெய்யும் விழிகளும் நாயேன்
உளத்திற் பிறங்கினவே. (14)

வேதம் அறியாப் புகழுறு
வோய்என விண்ணவர்கள்
நாதன் அறியா விறலுறு
வோய்என நான்வந்திலேன்
காதற் குறமகட் கன்பன்
எனவந்து கால்புகுந்தேன்
ஈதென் எனுதருள் செய்மரு
தாசலத் தின்னமுதே. (15)

அமுதே அனைய மொழிவள்ளிக்
காக அரும்புனத்தில்
இமையோர் வணங்கிய நின்னடி
போந்த தெனல்அறிந்தேன்
நமையாள்வன் என்னும்அந் நம்பிக்கை
கொண்டு நளினஅடி
தமைமேவி னேன்மரு தாசலத்
தோங்கும் தனிச்சுடரே. (16)

---

14. மொய்–வலிமை. அயில்–வேல்.

15. விறல்–வெற்றி மிடுக்கு. ஈது என்–இது என்ன பேதைமை.

16. நளினம்–தாமரை.

சுடர்வடி வேலுண்டு காலன்
வருங்கால் துணைவரற்குப்
படர்எழில் தோகை மயிலுண்டு
மாயைப் பரப்பழிக்கக்
கடலெனும் கந்த னருளுண்டு
தோன்றும் கருவொழிக்க
இடமுறு மாமரு தாசலம்
சென்றே இறைஞ்சுவனே. (17)

இறைஞ்சுகின் றேனை இவன்நமக்
காட்பட்ட ஏழையென்றே
நிறைந்த கருணையில் எள்ளள
வீந்து நிறுத்துவையேல்
குறைந்து விடுமோ வரையாமல்
ஈயும் கொடைவள்ளலே
அறைந்த முரசொலி ஆர்மரு
தாசலத் தாண்டவனே. (18)

ஆண்ட அநேகம் அரசர்
அழிந்தனர் ஆற்றல்மிகப்
பூண்ட விறல்வீரர் போயினர்
கல்விப் பொருப்பெனவே

---

17. கரு-பிறவி; ஆகு பெயர்.
18. வரையாமல்-அளவு குறியாமல்.

நீண்ட புகழ்பெற்ற யாவரும்
வீந்தனர் நித்தியனுய்
ஏண்டரு மாமரு தாசல
வேலன் இருந்தனனே. (19)

நேற்றிருந் தான்இன்று மாண்டனன்
என்னும் நிலையறிந்தே
போற்றினன் நின்னைப் புகழ்வேண்டி
லேன்உயிர் போம்பொழுதில்
ஆற்றகில் லாத்துயர் தந்திடுங்
காலன் அடலறுத்துன்
காற்றுணை தந்தருள் மாமரு
தாசலக் கட்குகனே. (20)

குகனே குமரா குழகா
அழகா குறைவில்உமை
மகனே திருமால் மருகா
மறையின் மறைபொருளே
சகனே வளிமா மணுளா
மருதச் சுரும்பினனே
சகம்நேர் மயலிற் படாமலிவ்
வேழையைத் தாங்குவையே. (21)

---

19. பொருப்பு-மலை. வீந்தனர்-இறந்தனர். ஏண் தரும்-பெருமையை உண்டாக்கும்.

20. கால் துணை-இரண்டு திருவடிகள்.

21. குழகா–இளமையுடையவனே. வளி-வள்ளி. மருதச் சுரும்பு-மருத மலை. சகம் நேர்-உலகிற் படும். மயல்-மயக்கம்.

தாங்குவ துன்னருள் ஒன்றே
எனும்உண்மை தான்அறிந்தேன்
ஈங்கினி யாரும் எனக்கருள்
வாரிலை யாவர்நமன்
ஏங்கும் படிவருங் காலை
உனையன்றி ஏன்றுகொள்வார்
தூங்கும் இருலவிர் மாமரு
தாசலத் தொல்பொருளே. (22)

பொருளேது நின்னருள் அன்றிநின்
பூந்தாள் புகழலன்றித்
தெருளேது நின்துணை யன்றித்
துணையேது சிந்தையினில்
இருளேது மின்றி நினதுரு
வத்தை இருத்துதற்காம்
அருளே வழங்குவை மாமரு
தாசலத் தற்புதனே. (23)

அற்புதம் அற்புதம் நின்னெழில்
என்றன் றமரினிடைப்
பொற்புறச் சூரனே போற்றிடு
வானேற் பொருந்துகின்றன்

---

22. தூங்கும் இருல் அவிர் - தொங்கும் தேனடைகள் விளங்குகின்ற.

23. தெருள்-தெளிவு.

சிற்பர மேனித் திருவெழிற்
கோரெல்லை செப்பலுண்டோ
மற்பொரு தோளாய் மருத
மலையுறை மாமணியே. (24)

மணியில் ஒளிபோல் மலரில்
மணம்போல் மகிதலத்தில்
திணிவுற் றிருந்தனை யாயினும்
நாயேன் திகைத்தனன்காண்
அணியுற்ற நின்திருக் கோலத்தைக்
காட்டி அருள்தருவாய்
பிணிமுற்றும் நீக்கும் மருதக்குன்
றோங்கும் பெருஞ்சுடரே. (25)

சுடருருக் கொண்டது கைவேல்
சுடருருத் துன்னும்மயில்
சுடருரு வாய்ந்தது கோழிநின்
கோலம் சுடருருவே
சுடரும் கதிரினில் தோன்றுவ
துன்றன் சுடரொளியே
சுடரும் மருத மலையினிற்
கோயில்கொள் தூயவனே (26)

---

24. மல்பொரு-மற்போரைச் செய்யும்.
25. திணிவுற்று-செறிந்து. அணி-அழகு.
26. கதிரினில்-சூரியனிடத்தில்.

தூயவ ராயினும் அல்லவ
ராயினும் சோர்வின் றிநின்
ஏய எழிற்கோலம் கண்டன
ரேல்இன்பம் எய்துவரால்
மாயையின் சேய்சமர்ப் பூமியில்
நின்னெழில் மாண்புகண்டான்
ஆயினன் மாமயில் என்னே
மருதா சலப்பரனே. (27)

பரனே பரம்பர னேபர
மாய பரவத்துவே
அரனே அரியே அயனே
அருகாஅல் லாவெனச்சொல்
வரனே வரந்தரு வானவ
னேசீர் மருதமலைக்
குரனே உனையன்றி உண்டோ
பிறபொருள் ஓதுதற்கே. (28)

ஓதும் மறையே மறையினில்
ஓங்கிய உட்பொருளே
நாதமும் விந்துவும் ஆகி
நிறைந்த நயச்சுடரே

---

27. ஏய-பொருந்திய. மாயையின் சேய்-சூரபன்மன். சமர்ப் பூமி-போர்க்களம்.

28. வரனே - மேலானவனே. உரனே - வலிமையாக உள்ளவனே.

பாதமென் பற்றைப் பரியப்
படரும் படிபற்றினேன்
ஏதமொன் றின்றி யருளாய்
மருதக்குன் றேய்ந்தவனே. (29)

குன்றாத செல்வம் குறையாத
இன்பம் கொளக்கொளமேல்
என்றேனும் வற்றாக் கருணைப்பே
ராறும் இடர்ப்பிறப்பில்
நின்றேறு வார்க்குப் புணையாம்மெய்ஞ்
ஞான நிலையதுவாம்
வென்றேறு வேலன் மருதா
சலன்றன் விரையடியே. (30)

அடிகண் டடைந்து பணிந்தால்
அகந்தை அறுமென்றஅப்
படிகண் டிறைஞ்சித் தடியென
வீழ்ந்தனன் பாவமெலாம்
தடிகண்ட பாம்பென ஓடின
நின்னருள் தாங்கப்பெற்றேன்
வடிகண்ட கண்வள்ளி நாதா
மருத மலையவனே. (31)

---

29. பற்றைப் பரிய-பற்றுக்களை நீங்கும்படி. ஏதம்-தீங்கு.

30. புணை-தெப்பம். விரை-நறுமணமுள்ள.

31. வடிகண்ட-மாவடுவை ஒத்த.

மலைமுனர்த் தோன்றப்பின் தோன்றிற்று
மண்எனின் மாண்புறுமம்
மலையினில் தெய்வம்முற் றோன்றிய
தெய்வமா வாழ்த்தல்தகும்
கலையினில் தேர்ந்த தமிழர்
குறிஞ்சிக் கடவுளென்றார்
கலையுணர் வார்சொல் மருத
மலைதிகழ் கந்தனையே. (32)

தனையே நிகர்க்கும் அருண
கிரிஎன்றன் தந்தைஅன்று
நினையே சரணென்று புக்கான்
அவற்கருள் நீட்டியநீ
எனையே அடிமைஎன் றேன்றுகொண்
டாலஃ திழிவுகொலோ
முனையேது மில்லா மருதா
சலத்து முதலவனே. (33)

முதலும் முடிவும் நடுவும்இல்
லாத முழுப்பொருள்நீ
அதுவும் இதுவும் உதுவுமென்
றேசுட் டரியபொருள்

---

32. "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

33. தனையே நிகர்க்கும்-வேறு யாரும் ஒவ்வாமல் **தன்னைத்** தானே ஒத்து நிற்கும். முனை - முன் நிற்கும் ஒப்பு.

கதுவும் திருமேனி கொண்டிங்கு
நாயேங்கள் காணும்படி
மதுவொன்று சோலை மருதக்குன்
றத்தில் வயங்கினையே. (34)

வயங்கொள்ள லாகா மனத்தினில்
நின்னுரு வைக்குமந்த
நயங்கொள்ள லின்றி மயங்கினேன்
நீநின் நலவுருவை
இயங்கும் படியென் உளத்தே
இருத்த இசைகுவையோ
மயங்கு மவர்காண மாட்டா
மருத மலையரசே. (35)

அரசே எனத்தேவர் போற்றிய
வேந்தனும் அன்றுகுலைந்
துரமேது மின்றி நினதடி
தாழ்ந்தான் உறுமவற்காய்
வரமேவுசூரன் குலமறுத்
தாய்என் மயலறுக்கும்
தரமேது சொல்வாய் மருதாச
லாஎன்றன் தாரகமே. (36)

---

34. கதுவும்-மேற்கொள்ளும். மது-தேன். வயங்கினை-விளங்கினாய்.

35. வயங்கொள்ளலாகா-வசப்படுத்த முடியாத. நயம்-நன்மை.

36. வேந்தன்-இந்திரன். உரம்-வலிமை. வரம்-தவத்தால் பெற்ற வரங்கள். தரம்-தகுதி. தாரகம்-ஆதாரமான பொருள்.

அகமேய ஐந்திணை யின்முற்
றிணையில் அலர்மலராத்
திகழ்வார நின்ற குறிஞ்சி
புறமாந் திணையில்முதற்
புகல்வாரும் வெட்சி இவைநினைக்
காமெழிற் பூக்களன்றோ
மகவான் தொழுமரு தாசலம்
மேய மயிலவனே. (37)

மயில்அவன் வாகனம் அஃதே
பிரணவ மாமனுவாம்
மயர்வறு மோங்காரச் சோதியி
னுள்ளே வயங்குகின்ற
ஒயிலினைத் தோகை மயிலிடைத்
தோன்றும் உருவுணர்த்தும்
குயிலுறு சோலை மருதா
சலத்துறை கோவினுக்கே. (38)

கேடற்ற சோதிஎன் கேடறுப்
பான்இக் கிளர்புவியில்
ஈடற்ற இன்பம் அருளுகின்
றுன்மது வீட்டமெனப்

37. மகவான்–இந்திரன். அகத்திணையில் முதல் திணைக்குரிய பூவும் புறத்திணையில் முதல் திணைக்குரிய பூவும் முருகனுக்கு உரியன என்றபடி.

38. மனு–மந்திரம். "ஆன தனிமந்த்ர ரூப நிலைகொண் டதாடு மயிலென்ப தறியேனே" என்பது திருப்புகழ். மயர்வு அறு - மயக்கத்தைப் போக்கும். ஒயில்–அழகு.

பாடற்ற மோனக் களிதேக்கி
யாடப் பணிக்கின்றனன்
கூடற்ற புள்ளுறை மாமரு
தாசலக் கொற்றவனே. (39)

தவம்நேர்ந் திலன்மறை தேர்ந்திலன்
அஞ்சு தகைந்திலன்மேற்
பவம்நேர் வதற்கு மருந்தே
தெனஎண்ணிப் பார்க்கிலன்யான்
சிவம்நேர் பவன்முரு கன்மரு
தாசலம் சேர்ந்துருகி
நவம்நேர் உணர்வு பெறுதலொன்
றேஇன்று நாடினனே. (40)

நாடித் திரிந்து பலதலம்
மேவி நறும்புனலில்
ஆடித் துளைந்து செபஞ்செய்து
சான மதிலமர்ந்து

39. ஈட்டம் - சேர்ந்த பிழம்பு. பாடு அற்ற - ஒலியற்ற. கூடற்ற புள்-இயற்கையாகப் பறக்கும் பறவைகள்.

40. நேர்ந்திலன் - செய்யவில்லை. அஞ்சு-ஐம்பொறிகள். தகைந்திலன்-யான் தடுக்கவில்லை. பவம் நேர்வதற்கு-பிறவியை எதிர்வதற்கு. நேர்பவன்-ஒப்பவன். நவம்நேர்-புதுமையை யுடைய.

பாடிப் பரிந்து வழிபடப்
பெற்றிலாப் பாவிஉனைக்
கூடிச் சுகிக்க மருதா
சலவழி கூறுவையே. (41)

கூறு படாத முழுவின்பம்
தந்து குளிரவைத்து
மாறு படாதருள் என்தெய்வ
மேசுடர் மாமணியே
வேறு படாதுன் அடியாரைப்
போற்றி விரைமலர்கள்
நாறு படாம்போற் படர்மரு
தாசலம் நண்ணுவனே. (42)

நண்ணிய நின்னடி யாரைப்
பணிந்து நயந்துபத்தி
பண்ணிய தால்வரும் புண்ணியத்
தால்தொக்க பாவமெலாம்
அண்ணிய சூரியன் முன்பனி
என்ன அகன்றிடுமே
திண்ணிய நெஞ்சர் தொழுமரு
தாசலத் தெய்வதமே. (43)

41. சானம்-தியானம். பரிந்து-இரங்கி.

42. நாறு படாம் போல்-மணம் வீசும் போர்வையைப் போல.

வதமே புரிந்த அவுணரை
மாய்க்க வருகதையோ
இதமே புரிநின் கதைசூரன்
நின்னருள் ஏற்றதனுல்
நிதமே நடம்புரி மஞ்ஞையாய்ச்
சேவலாய் நீடினன்அவ்
விதமே அருள்புரி வோன்நீ
மருத விலங்கலனே. (44)

விலங்கலன் மெய்யினுல் ஆயினும்
நாயேன் வெதும்புமனம்
துலங்கும் பலவெண்ணத் தால்விலங்
காயினன் தூயநின்றன்
இலங்குரு வத்தினை யுள்ளே
இருத்தின் இனியுய்குவேன்
கலங்கலில் லார்பணி மாமரு
தாசலக் கண்மணியே. (45)

கண்மணி பூண்டு திருநீறு
பூசிக் கசிந்துருகிப்
பண்மணி யான திருப்புகழ்
பாடிப் பணிந்துநின்றன்
ஒண்மணி யாகிய ஆறெழுத்
தோதி உவந்திருக்கப்

---

44. அவுணரை-அசுரரை. நின் கதை வருகதையோ. **விலங்கலன்**-மலையையுடையோன்.

45. மெய்யினுல் விலங்கு அலன்.

பண்மணி யார்மரு தாசலம்
மேய பரஞ்சுடரே. (46)

சுடரும் விளக்கும் தனிச்சோ
தியுமெனத் தோன்றுகினை
இடரொன்று மின்றி எனதுளத்
தேற்ற எதுவழியோ
திடரொன்று குன்றந் துளைத்தவை
வேல சிவன்மைந்தனே
அடர்கின்ற பூம்பொழி லார்மரு
தாசலத் தானந்தனே. (47)

ஆனந்த மாய்என் அறிவாய்
அறிவா லணைசுடராய்த்
தானந்த மில்லாத் தனிப்பொரு
ளாய்நின்ற தத்துவனே
தேனந்த லின்றிச் சொரியும்
மருதத் திருமலைஎம்
மான்அந்த கன்வருங் காலை
அரணென் றருளுவையே. (48)

---

46. கண்மணி-உருத்திராட்சம். பண்மணி ஆன-இராகம் அமைந்த மாணிக்கம் போன்ற. மணியாகிய-அழகாகிய. பண்-செய்தருள். மணி ஆர்-நவமணிகள் நிரம்பிய.

47. சுடர்-சூரியசந்திராக்கினிகள். திடர் ஒன்று - மேடுகளை உடைய.

48. தான் அந்தம் இல்லா. தேன் நந்தல் இன்றிச் சொரியும்; நந்தல்-குறைதல். எம்மான்-எம்பெருமானே. அந்தகன்-யமன். அரண்-பாதுகாப்பு.

வைவேற் கரத்தவன் மைவேற்கண்
குஞ்சரி மாலைகொண்டான்
நைவேற் கருள்செய்து சாந்தி
அளித்தமெய்ஞ் ஞானகுகன்
மெய்வேற் றுமைபோகச் சொன்மறை
போற்றும் விமலன்வள்ளி
வைவேற்ற காந்தன் மருத
மலையை மகிழ்ந்தனனே. (49)

மகிழ்ந்துசெம் மாந்து பயமின்றி
வாழ வழியுண்டுகாண்
நெகிழ்ந்து மிகக்கசிந் துள்ளெலும்
பெல்லாம் நெகநின்றுகண்
அகழ்ந்திடு மூற்றென நீர்பெய
வாழ்த்தி அணைந்துதினம்
புகழ்ந்திடு வாய்நெஞ்ச மேமரு
தாசலப் போதனையே. (50)

போதனை முன்னுட் சிரத்தினிற்
குட்டிப் பொருந்துசிறை
வேதனை கொள்ளப் புகுத்திநின்
ருன்அது வீண்பிறவி

49. வை-கூர்மையான. குஞ்சரி-தேவயானை. நைவேற்கு-வருந்துகின்ற அடியேனுக்கு. வைவு ஏற்ற.

50. போதன்-உபதேசம் செய்யும் குரு.

ஏதமெய் தாமல் அருள்வா
னெனுமுண்மை எய்துவிக்கும்
பூதலம் போற்றும் மருதா
சலத்துறை புண்ணியனே. (51)

புண்ணியம் நண்ணிய கண்ணியர்
கொங்கிற் பொலிமருதத்
திண்ணிய குன்றினில் அண்ணிய
தேனைத் தெளிந்தருந்தி
மண்ணிய நன்மணி என்ன
இருந்தார் மதியிலிசொல்
தண்ணிய னல்லேன் மயலுழந்
தேனென் தலையெழுத்தே. (52)

எழுத்திற் கதுவாத நான்மறைக்
குட்பொருள் என்தலையின்
எழுத்தைக் குறைத்துப் பவநோயை
மாற்றும் எளியபொருள்
எழுத்திற் பதத்திற் பொருளிற்
சிறக்கும் இனியதமிழ்
எழுத்திற் பொலிபொருள் மாமரு
தக்குன் றிருந்ததுவே. (53)

---

51. போதனை-மலரிலுள்ள பிரமனை. ஏதம்-துன்பம்.

52. கண்ணியர்-மதிப்புடையோர். மண்ணிய - சாணையிட்ட. சொல் தண்ணியன் அல்லேன்-குளிர்ந்த சொல்லை உடையவனல்லாத யான்.

53. கதுவாத - அகப்படாத. பவ நோயை - பிறவியாகிய பிணியை. பதத்தில் - சொல்லில். தமிழ் எழுத்தில்-தமிழில் எழுதிய நூல்களில்.

இருந்த படியிருந் தேகாந்த
நன்னிலை ஏய்ந்துவிழி
விருந்தெனும் மின்சுடர்க் கோலத்தை
உள்ளே மிளிரவைத்துத்
திருந்திய மோனத்தில் ஓயாத
இன்பத்தைத் தேக்கிடவே
வருந்தினன் நீயருள் வாய்மரு
தாசலம் வாழ்ஐயனே. (54)

ஐயா எனக்கருள் அப்பா
எனக்கருள் ஆறுமுகச்
செய்யா எனக்கருள் தேவே
எனக்கருள் செஞ்சுடர்வேற்
கையா எனக்கருள் மாமரு
தாசலக் கந்தனெனும்
மெய்யா எனக்கருள் வேளே
எனக்கருள் வீறுறவே. (55)

வேதாந்த மென்பர்சித் தாந்தமென்
பார்பின்னர் வேறுசொலும்
நாதாந்த மென்பர்போ தாந்தமென்
றேஒன்று நாட்டுவரால்

---

54. தேக்கிட-அருந்தி ஏப்பம்விட. வருந்தினன்-உழைத்தேன்; முயன்றேன்.

55. செய்யா-செந்நிறமுடையவனே,

சூதாந் தரமிந்த நூலறி
வென்று துணிந்தடைந்தேன்
ஈதாந் தனித்துணை யென்றே
மருதன் இணையடியே. (56)

இணையொன் றிலாவருள் ஆர்தரு
வார்பகை என்னவெண்ணிக்
கணையும் படையும் கொடுவந்த
சூரைக் கருணையினால்
அணையும் எழிலூர்தி யென்றும்
கொடியென்றும் ஆக்கினனால்
துணையுந் தொழுந்தேவு மாம்மரு
தாசலச் சோதியன்றே. (57)

சோதிச் செழும்பொருள் ஓங்காரம்
என்னும் சுடர்ப்பிழம்பாம்
ஆதிக் கடவுள்பின் அந்தமில்
லாத அருமைப்பொருள்
சேதிக்க ஒண்ணாப் பரம்பொருள்
செம்பொருள் தேவர்தங்கள்
மாதுக்க நீக்கி மருதா
சலத்தில் வயங்கியதே. (58)

---

56. சூது ஆம் தரம்-வஞ்சகமான நிலையுடையது. இணையடியை, ஈது தனித்துணை ஆமென்று அடைந்தேன்.

57. இணை-ஒப்பு. கணை-அம்பு. சூரை-சூரபன்மனை. ஊர்தி-வாகனம்.

58. சேதிக்க - குலைக்க; அழிக்க.

தேவாதி தேவா திருமுரு
காவள்ளி சேர்கணவா
போவா திரும்பி எனநவி
லாவண்மை பூத்தவனே
சாவாதி துன்பத்தை நீக்கும்
பிரான்மரு தாசலனே
நோவா திருவென வந்தெனக்
கோர்சொல் நுவலுவையே. (59)

நுவலற் கினிய புகழுடை
யாய்கண்கள் நூறுபல
குவியப் பெறுகினும் கண்டடங்
காஎழில் கொண்டவனே
தவலற்று மாரு இளமை
படைத்தமைந் தாஅடியார்
கவலைப் படாமல் மருதா
சலத்துருக் காட்டினையே. (60)

காட்டினை யேவ்ளளி யேன்காண்பன்
தண்ணென் கருணையினல்
ஊட்டினை யேலதை உண்பன்நல்
லோர்கள் உறவெனக்குக்

---

59. இப்போது போ, பிறகு திரும்பி வா என்று சொல்லாத வள்ளல் தன்மை. சாவு ஆதி துன்பத்தை. பிரான்: .விளி.

60. பல நூறு. தவல் அற்று—அழிதலற்று.

கூட்டினை யேலவர் தம்மொடும்
கூடுவன் கோபமென்மேல்
நாட்டினை யேற்செய்வ தென்மரு
தாசல நாயகனே. (61)

நாயக ஞகும் பதவியை
வேண்டிலன் நற்புலமை
வாயறி வோனெனும் சீரும்
விழைகிலன் மாண்பொருளை
மேயவன் என்னும் நிலையும்
விரும்பிலன் வேண்டுவதுன்
தூய அருளொன்றே மாமரு
தாசலச் சுந்தரனே. (62)

சுந்தர மாமயி லேறும்
பிரானைச் சுடர்வடிவேற்
கந்தனை வேளைக் குமரனைப்
பன்னிரு கண்ணருளால்
பந்தனை நீக்கும் மருதா
சலத்திற் பதியினைத்தாள்
வந்தனை செய்பவர்க் கின்னலில்
லையின்ப வாழ்வுறுமே. (63)

---

62. வாய்-பொருந்திய.

63. பந்தனை-பாசத்தை. பதி-தலைவன்,

மேகங்கண் டாடும் மயின்மேற்
பவனி விரைந்துவரும்
ஏகன்கண் டென்னும் மொழிவள்ளி
நாயகன் ஏர்தருவி
சாகன் மருத மலைக்கும
ரேசன் தருமருட்குத்
தாகங் கொளுமடி யாரடி
யேஎன் தலையினவே. (64)

தலைச்சங்கத் தேபுல வோனென
மன்னித் தமிழ்புரந்தாய்
மலைக்குகைக் குட்பட்ட கீரன்
கவிதை வணைந்தருளி
அலைக்கின்ற கற்கி முகியைத்
தடிந்தாய் அணிமருத
மலைக்கும ரேசநின் தாள்பாடும்
ஆற்றல் வழங்குவையே. (65)

ஏதமில் லாக்கள வுத்திருக்
காதல் எழிற்குறத்தி
மாதிடம் செய்தனை கற்புத்
திருமணம் வானவர்கோன்

---

64. கண்டு என்னும்-கற்கண்டு என்று சொல்லும். விசாகன்-விசாக நட்சத்திரத்தில் தோன்றியவன்.

65. கற்கிமுகி-குதிரை முகமுள்ள பெண் பூதம். தடிந்தாய்-அழித்தாய்.

ஆதரங் கொள்மகள் பாலே
நிகழ்த்தினை ஆய்தமிழின்
மீதுறு மன்பினன் றேருமரு
தாசல வேலவனே. (66)

வேலெனும் ஞான வியன்சத்தி
யால்வெவ்வ விச்சையெனும்
சீலமில் லாவவு ணக்குலம்
போக்கினை தேவர்கரி
ஏலுங் கிரியை குறமகள்
இச்சையென் றேயிலகும்
கோலங்கொண் டாய்மரு தாசலத்
தேநின்ற கொற்றவனே. (67)

கொற்றவன் நீஅடி யேன்உன்
குடிமகன் கூரருளால்
பெற்றவன் நீஅடி யேன்உன்
மகன்குரு பீடுறும் நீ
உற்றமா ணாக்கன் அடியேன்கண்
கண்ட ஒருதெய்வம்நீ
மற்றடி யேன் பத்தன் மாமரு
தாசல வானவனே. (68)

வானவர் தம்பத மேயெனி
னும்பெற வாஞ்சையிலேன்

---

67. அவிச்சை–அஞ்ஞானம். தேவர்கரி–தேவயானை.

கோனென ஞாலம் புரக்கும்
திருவும் குறிக்ககிலேன்
தேனென நின்திரு நாமம்
மொழிந்து திருவடிக்கே
ஆன அடிமை விரும்பினன்
மாமரு தாசலனே. (69)

சலனமில் லாத மனத்தினில்
நின்னுருச் சாரவைத்துப்
புலனிற்செல் லாத படியொன்றி
அன்பு பொருந்திநைந்து
நிலனுற்ற மீனென நின்னருட்
காக நிதந்துடிக்கும்
நலனுற் றிடவருள் ஏர்மரு
தாசல நாயகனே. (70)

அகமும் புறமும் இரண்டின்றி
ஒன்றென ஆர்ந்தவர்பால்
மிகஒன்றி வாழக் கவலைவந்
தால்நின் விரைமயில்மேல்
தகவந்த கோலம் கருதி
அமைதியைச் சாரஅருள்

---

69. பதம்-பதவி. குறிக்ககிலேன்-யான் எண்ணவில்லை. அடிமை-அடிமையாகும் தன்மை.

70. ஏர்-எழுச்சியையுடைய.

சுகமொன்று சோலை மருத
மலைமேல் சுடர்பவனே (71)

சுடரில் விழுகின்ற விட்டிலைப்
போலத் தொகுபுவியில்
அடரும் மயலின்பம் கொண்ட இவ்
வேழை அறுமுகமும்
படரும் எழிற்றிருப் பாதமும்
எண்ணிப் பணிய அருள்
இடர்குன்றச் செய்மரு தாசலக்
கோயில் இருப்பவனே. (72)

இருப்பதும் உண்பதும் சற்றும்
கவலை இலாமல்உயிர்
தரிப்பதும் எல்லாம் நினதரு
ளாலன்றிச் சார்வதுண்டோ
சிரித்தொரு மூன்று புரமெரி
யிட்ட சிவன்குருவே
கிரித்தலை வாமரு தக்குன்றம்
நின்றருள் கேடிலியே. (73)

கேடிலி தோற்ற மிலியவு
ணர்க்குக் கிழமையிலி

---

71. வாழவும் சாரவும் அருள். சுகம்-கிளி. சுடர்பவன்-ஒளிவீசுபவன்.

72. சுடரில்-விளக்கில்.

நாடிலி பேரும் குறியு
மிலிதனை நம்பலர்க்குப்
பாடிலி கூடிலி வீடிலி
ஈடிலி பண்புமிலி
வாடிலி தண்மரு தாசலத்
தோங்கறு மாமுகனே. (74)

முகமன் உரைத்து முறுவல்செய்
தேயன்பர் முன்வணங்கி
அகமன்னு மன்பின் உபசாரம்
செய்தவர்க் காமுணவு
தகமுன்னி யீயுந் தகையருள்
வாய்செந் தமிழ்க்கரசே
சுகமன்னு சோலை மருதா
சலத்துறை தூயவனே. (75)

தூயவன் பர்க்குத் தொழும்புசெய்
யாமல் துரிசகன்று
மேயவன் பாலுனைப் பூசிப்ப
தின்றி விழற்கிறைத்துப்

---

74. கிழமை இலி-உறவில்லாதவன்; பகைவன். நாடு இலி - நாடு இல்லாதவன். குறி-அடையாளம்; உருவமும் ஆம். நம்பலர்க்கு-நம்பாதவர்களுக்கு. பாடுஇலி-தோன்றுதல் இல்லாதவன்; பெருமை இல்லாதவன் என்பதும் பொருந்தும். கூடிலி-தேகம் இல்லாதவன். வீடு இலி-இல்லம் இல்லாதவன். ஈடு இலி-ஒப்பு இல்லாதவன். வாடிலி-வாட்டம் இல்லாதவன்.

75. அகம்-மனத்தில். முன்னி-எண்ணி. தகை-இயல்பு; தகுதியென்பதும் பொருந்தும். சுகம்-கிளி.

போயநன் னீரென வாழ்க்கையைப்
போக்கும் புலையனேற்கு
நீயரு ளாய்மரு தாசலக்
கோயில் நிமிர்ந்தவனே. (76)

நிமிர்ந்துநிற் பார்யமன் முன்னர்ப்
பிறவிக்கு நெஞ்சழியார்
சுமந்த வினையால் துயரமு
ருர்இன்பச் சூழலுக்குள்
அமைந்திருப் பார்மரு தாசலம்
மேய அறுமுகனை
இமிர்ந்த கடம்பணி தோளனை
நண்ணி இறைஞ்சினரே. (77)

இறைஞ்சித் திருப்புகழ் பாடி
உருகிநைந் தேத்தியுள்ளம்
நிறைஞ்சொத்த சாந்தியி னிற்பதே
இன்பம் நினைமறவா
துறைந்திடும் வாழ்வே அழியாத
வாழ்வினை ஒன்றிநின்று
மறைந்திடு தல்முத்தி மாமரு
தாசலம் வாழ்பவனே. (78)

---

76. நுரிசு-குற்றம்.

77. இமிர்ந்த-வண்டுகள் ஒலிக்கின்ற.

78. நிறைஞ்சு - நிறைந்து. மறைந்திடுதல் - ஒன்றாகக் கரைதல்.

பவனைத் திருத்தந்தை யென்னும்
    பிரானைப் பவானிதரு
மவனைக் கலியுக தெய்வத்தை
    வேளை அருட்கடலை
நவனைக் குளிர்மரு தாசல
    ஏந்தலை நம்பினவர்
தவம்மெய்த் தவம்மற்றை யோர்முனைந்
    தேசெய் தவமவமே. (79)

அவமாய வாழ்வை யகற்றி
    அடிமையென் ருட்படுத்தித்
தவமீ தெனவெனைக் காட்டித்
    தருக்கைத் தவிர்த்தொழித்தான்
சிவமே தொழுங்குரு கொங்கில்
    மருதத் திருமலையிற்
பவமேற லின்றி யருள்செயும்
    வேற்கைப் பராபரனே. (80)

பரனூர் கிரியும் அலைவாயும்
    தென்பழ னிப்பதியும்
வரனுரு மேரக முங்குன்றம்
    யாவும் வனமலையும்
திரனுர ஆறு படைவீ
    டெனக்கொளுந் தேசிகனைக்

---

79. பவன்-சிவபெருமான். பவானி-உமாதேவி. நவனை-புதுமையுடையவனை. ஏந்தலை-தலைவனை. அவம்-வீண்.

80. பவம் ஏறல் இன்றி-பாவம் ஓங்காமல்; பிறவியை அடையாதபடி எனலும் ஆம்.

கரனு றிரண்டனை நன்மரு
 தக்குன் றிற் கண்டனனே. (81)

கண்டனை யான்செங் கரும்பனை
 யான்தேன் கடலனையான்
உண்டறி யாத அமுதனை
 யான்எனை ஓங்கருளில்
பண்டறி யாத படிபதித்
 தான் இனிப் பைதலுண்டோ?
வண்டறி யாத கடம்பன்
 மருத மலையரசே. (82)

மலையர சன்விண் ணகவர
 சன்றமிழ் மாமொழியின்
நிலையர சன்வள்ளி வாழ்த்தர
 சன்மறை நீண்டுபுகழ்
கலையர சன்மரு தாசலன்
 நற்குடி காண் இனியான்
அலைவு பெறேனுன்கைப் பாசத்தி
 னலீ தறிநமனே. (83)

நமரென்று பாரினில் யாவரை
 யோகொண்டு நாடும்நெஞ்சே
தமரென் றவரை அடைவத
 னாற்பயன் சற்றுமிலை

---

81. பரனூர் கிரி-திருப்பரங்குன்றம். அலைவாய்-திருச்செந்தூர். வரன்-மேன்மை. வனமலை-பழமுதிர் சோலை மலை. திரன் ஆர-நிலைகொள்ளும்படி. கரன்-கரம்.

82. கண்டு அனையான் - கற்கண்டைப் போன்றவன். பைதல் - துன்பம். 83. குடி-குடிமகன்.

குமரன் மருத மலைக்குழ
கன்திருக் கோலவடிக்
கமரும்அன் பர்தமை யேயுற
வாக அடைகுதியே. (84)

குதித்து வருமயில் மேலேறி
வந்து குறுகிஎனை
மதித்தாண் டருள்தரும் காலமுண்
டோமறை மாமுனிவோர்
துதித்து வணங்கிடும் நாயக
னேசுரர் சூழ்மணியே
கதித்த வளங்கொள் மருதா
சலத்துக் கலந்தவனே. (85)

கலந்திகழ் மேனி அரிவையர்
பாற்கொண்ட காமமுழந்
தலந்தது போதும்நின் தூய
திருவெழி லாருருவை
மலந்தப நெஞ்சினில் வைத்துத்
தியானித்து மாண்புபெறும்
நலந்தரு வாய்தண் மருத
மலைப்பதி நாயகனே. (86)

---

84. நமர்-நம்மவர். தமர்-சுற்றத்தார். குழகன்-இளையவன்.

85. மதித்து - ஒரு பொருளாக எண்ணி. சூழ்-வலஞ் செய்யும். கதித்த-மிக்க.

86. கலம்-ஆபரணம். அலந்தது-ஏங்கியது. தப-போக.

நாயடி யேனுனை நாதனென்
றெண்ணி நயந்துவந்தேன்
நீயடி யானென ஏன்றுகொண்
டாலது நிச்சயமாம்
தாயடி மேவுங் குழந்தைபோல்
ஏங்கித் தளருகின்றேன்
மாயவ னோர்மரு காமரு
தாசலம் வாழொளியே. (87)

ஒளியார் சுடர்க்கும் ஒளிதந்
தனைபுவி ஊறுபுனல்
குளியாரத் தண்மை யளித்தனை
பாரிற் குடிபெறவே
நளியார் உயிர்களை நாட்டினை
ஏழைக்குன் நற்கருணை
அளியார வைத்திலை என்மரு
தாசலத் தாண்டவனே. (88)

ஆண்ட தலைவன் அடிமையைப்
பாரா தயர்ந்தனனேல்
வேண்டு வதைத்தந்து காப்பவ
ரார்இந்த மேதினியில்
ஆண்டவன் நீயன்றி மற்றவர்
காப்பரென் றண்டிலன்யான்
தூண்டரு சோதி மருத
மலைக்குட் சுடர்விளக்கே. (89)

---

87. நிச்சயமாம்-உறுதியாகும்.

88. குளி ஆர-குளித்தல் நிரம்பும்படி. நளி ஆர்-செறிவாக உள்ள. அளி-அன்பு. என்-என்ன காரணம்.

89. அயர்ந்தனனேல்-மறந்தானானால், தூண்ட அரு; தொகுத்தல் விகாரம்.

விளக்குக்கும் செங்கதி ரோனுக்கும்
வான வியன்மதிக்கும்
ஒளிக்க லறியா இருளென்
மனத்துள் உறைந்ததுகாண்
அளப்பரி தாகிய ஞானவை
வேல்கொண் டதையொழிப்பாய்
துளக்கறு வோய்மரு தாசலம்
மேய சுடர்க் கொழுந்தே. (90)

கொழுந்தென நின்றுவிண் ணோரையந்
நாள்காத்த கோமகன்நீ
எழுந்துய ராலிளைந் தேயடி
யேன்நிற்கும் இந்நிலையில்
அழுந்து படாமல் அருள்செயல்
நிற்கோ ரருஞ்செயலோ
தொழுந்தவர் சூழ்மரு தாசலம்
மேவிய தொன்மையனே. (91)

தொன்மைப் பொருளுக்குத் தொன்மைப்
பொருளாய்த் துலங்குபல
நன்மைப் புதுமைப் பொருட்கும்
புதிய நயப்பொருளாய்
இன்மைப் பொருளாகி உண்மைப்
பொருளாய் இலகுகுகன்
பன்மை யறுக்க மருதா
சலத்திற் படர்ந்தனனே. (92)

---

90. துளக்கு—சலனம்.

91. இளைந்தே-வருந்தி. அழுந்துபடாமல்-ஆழாமல்: தவர்-தவஞ்செய்யும் முனிவர்.

படரும் கொடியொன்று கொள்கொம்
பிலாமற் படருழந்தே
இடரொன்றி நின்ற அதுபோல்
இருக்குமிவ் வேழையின்பால்
கடலொன்று தண்ணரு ளிற்றுளி
ஈந்து கவலையற்றுக்
கிடவென்று சொல்லாய் மருதா
சலத்திற் கெழுமணியே. (93)

மணியே மணியில் ஒளியே
ஒளியில் மலிதெளிவே
அணியோர் மயிலில் வருஞ்சுட
ரேஎனை ஆண்டவனே
தணியோர் பொழில்மரு தாசலம்
நின்ற தனித்தெய்வமே
பிணியேய் பிறவிக் கடலலை
யாதெனைப் பேணுவையே. (94)

பேணும் மனைவி தனயரென்
றெண்ணிப் பெரிதழிந்தேன்
வீணில் உழன்ற மனத்தில்
உனைவைத்து மேனிலையைக்
காணும் நெறியறி யேனுனைப்
பற்றிக் கதியடைய
வேணும் வழிசொல் மருதா
சலத்தை விழைந்தவனே. (95)

---

93. படர் உழந்து-துன்பத்தை அடைந்து.

94. தணி-குளிர்ச்சி.

95. தனயர்-புதல்வர்.

விழைதல் வெறுத்தல் இரண்டற்ற
ஞானியர் மேவுமிராத்
தழையும் பகலின்றி ஓங்கும்
நிலத்திற் றனியிருப்பார்
குழையுமன் பில்லாக் கொடியன்
எனக்கது கூடுவதோ
மழையொன்று சோலை திகழும்
மருத மலைமருந்தே. (96)

மருந்தும் பிணியும் விதியும்
மதியும் மரணமும்பார்
திருந்திய வாழ்வும் இடரும்
சுகமும் தெரியகிலா
தருந்துமெய் யின்ப அநுபவம்
கூட அருள்தருவாய்
விருந்தெனும் காட்சி தருமரு
தாசல மெய்ப்பொருளே. (97)

பொருளாய்ப் பொருள்தரு போகமு
மாயென்றன் புந்திவரு
தெருளாய்த் தெருளில் திகழின்ப
மாய்த்தவம் தேடிலர்க்கு

---

96. இராவும் பகலும் இன்றி - கேவல சகலங்கள் இன்றி. மழை-மேகம். ஒன்று-சேர்ந்த.

97. விருந்தெனும் - கண்ணுக்கு விருந்தென்று சொல்லும்

மருளாய் மருளில் இருளாய்
இலகும் வடிவழகா
அருளாய் எனநின் மருதா
சலத்தை அணுகுவனே. (98)

அணுக அரியது சுட்ட
அரிய தளவைகளால்
துணிய அரியது நெஞ்சிற்கெட்
டாதது தூமறையும்
நணுக அரிய தெனச்சொல்
பிரமமே நாம்பணிய
அணிய தெளிய தெனமரு
தாசலத் தாரமுதே. (௯௯)

தேற்றுங் குமாரன் நமையாள
வந்து திருவுருக்கொண்
டாற்று மருட்செயல் மாமரு
தாசலத் தஃதறிந்து
நாற்றிசை ஏத்தும் திருச்சந்
நிதிஎய்தி நாடிநின்று
போற்றினம் துன்பினி இன்றும்
துணையவன் பூங்கழலே. (100)

---

98. தெருள்-தெளிவு. மருள்-மயக்கம்.

99. நணுக - அடைய. அணியது - சமீபத்தில் உள்ளது. மருதாசலத்தில் ஆரும் அமுது.

100. அருட்செயல் ஆற்றும். ஆற்றும்-செய்வான். மருதாசலத்தில் ஆற்றும்.